யதள்ளு, மூரையுங் கரியின் றலைமிதித்த வழகார் வெங்கை யர ன்றுளு, நிரையுஞ் சுரர்கண் டுருவனைத்து மருளே யென்ன நினைவாரோ. (௯௯)

நேரிசைவெண்பா.

நினைகுவதுன் கோலமே நெஞ்சத் தடியேன்
புனைகுவதுன் செங்கமலப் பொற்றாள்—வினவுவது
கோவே யெனவிண் குழாம்புகழும் வெங்கைநகர்த்
தேவே யுனதொழிவில் சீர். (௧௦௦)

திருவெங்கைக்கலம்பகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

## தனிச்செய்யுள்கள்.

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விற்ற தார்கலை பாதி யோடுவ னத்தி லேயழ விட்டதார், வெஞ்சி றைப்புக விட்ட தார்துகி லூரிய விட்டுவி ழித்ததா,—ருற்ற தாரமும் வேண்டு மென்றினி மன்னர் பெண்கொள லொண்ணுமோ, வுமிய டாமண மென்ற வாய்கிழித் தோலை காற்றிலு ருட்டா,—வெற்றி யாகிய முத்தி தந்தருள் வெங்கை மாநகர் வேடர்யாம், விமல ரானவ ரெமைய டுத்தினி தெங் கண் மிச்சின்மி சைந்தபின்,—பெற்ற வேலர்த மக்கு யாமொரு பெண்வ ளர்ப்பினி லீந்தனம், பெற்ற பிள்ளைகொ டுப்ப ரோவி தென் பேய்பி டித்திடு தூதரே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துளங்குமொளித் திங்கடனை யம்புலியென் றுலகமெலாஞ் சொல்லக் கேட்டும், பளிங்கனைய வயிற்றினது விழுங்கியமான் புறந்தோன்றப் பார்த்துங் கெட்டே, னிளங்கொடிய புலியி தென வறிந்திலே னறிந்தேனே லென்பட்டாலுங், களங்கனி மா மிடற்றிறையைத் திருவெங்கைக் காவலனைக் கைவிடேனே.

இவ் விருசெய்யுட்களும் பிரதிகடோறும் இருக்கின்றன.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவெங்கையுலா.

## காப்பு.

### நேரிசைவெண்பா.

நாவலர்தம் வாய்வீதி நாளு முலாவருமே
தாவருநம் வெங்கையிறை தன்னுலாப்—பாவெனுமோ
ரம்பொற் றளிபூண வாழத் தசப்பட்ட
கும்பக் கடாக்களிற்றைக் கொண்டு.

## தலவிசேடம்.

௧ பூமேவு செம்மற் புகழ்வடிவங் கொண்டன்ன
பாமேவு மங்கைபுகழ் பண்பினு—னேமேவு
வில்லிற் கருந்தடங்கண் மேவுஞ் சிரியநுதல்
வல்லிக் கிடங்கொடுத்த வண்மையினு—னல்லிமலர்
யாணர்த் தவிசி னெகினவர சின்றளவுங்
காணக் கிடையாத கங்கையான்—மாணப்
பொருவரிய பூங்கட் பொறியரியாற் சென்று
மருவரிய நற்றுண் மலரான்—விரவுசடைக்
௫ கானிருக்க விவ்வீர்ங் கதிர்க்கியைபென் னென்றுமறி
மானிருக்குங் கைத்தா மரையினுன்—யானிருக்குங்
காயத் திருப்பதுபுன் காரேனக் கொம்போவென்
றேயப் பிறையிருக்கு மீர்ஞ்சடையான்—றூயமுக்

கண்ணுமெழின் மூக்கொடுவார் காம்புபுணர் கூவிளமென்
வண்ணவிலை காட்டும் வதனத்தா—னண்ணல்
வழுவை யடர்த்து வயங்கொளெறி பத்தர்
மழுவை யுவக்கு மழுவான்—பழவடிமைக்
கண்ணனையுஞ் சில்லோர் கடவுளெனத் தன்னொடும்வைத்
தெண்ணவழ னஞ்சயின்ற வெம்பிரான்—பெண்ணுருவம்
௪௦ பெற்ற வருளொடும்போய்ப் பெண்வலைப்பட் டுற்றதுய
ரற்ற வறிஞ ரகம்புகுவோன்—முற்றவிரி
தத்துவமென் றுறுறுந் தாங்கடந்து போயறத்தி
லெய்த்தவர்க்குக் காட்டு மியல்பினன்—முத்தமணி
யாற்றிற் பொருதிருவா ரூர்க்குளத்தி லன்றுசென்று
தோற்றப் புரியுந் தொழிற்சித்த—னேற்றுங்
கணையைமல ரென்று கருதா மதனைத்
துணையை விடுத்தெரித்த தோன்ற—லணையும்
பிறப்புக் கிறப்புப் பெருமருந்து செய்யுங்
குறிப்புக் கரியமுது குன்றோன்—சிறப்பப்
௪௫ பெரியவரைச் சங்கம் பெறப்பந்தி சேர்த்து
விரிய விலைமுன் விரித்து—வரிசைபட
வன்னம் படைத்துமிசை யாங்கிடுவ விட்டருத்தி
மன்னும் பழுக்காய் வரவளித்துந்—தன்னங்
துறைபடுநீர் சென்னியிற்றன் றேழமைவான் கங்கை
பொறைபடநன் றேறல் புரிந்து—முறைபடுமிம்
மண்ணின்மேல் வெற்பு வளமுடையே மிம்மடவார்
விண்ணின்மேல் வெற்பதுநா மேவுவமென்—றெண்ணி
கொங்கைக் கலவைக் குளிர்சந் தழித்தலைத்துக் [மேற்
கங்கைப் புனலைக் கடுத்தெழுந்துங்—கங்கைக்குத்
௫௦ தானு யகமென்று தானதனு லெஞ்ஞான்று
மானுவினைக ளழித்திட்டு—மானுகக்

கோடுங் கழையுங் குடவளையும் விண்முகடு
நாடுங் கழையு நளினமலர்க்—காடுங்
கொடுத்த மணிபலவுங் கொண்டு தனக்கிங்
கடுத்த பெயரை யளித்தும்—படைத்த
பழகு புகழிப் படிமுழுதும் போர்ப்ப
வொழுகுமணி முத்தா றுடையான்—முழுகுபவஞ்
சிந்தும் * விவசித்துச் செய்பணிக்குக் காரணமாய்
வந்துமுத னின்றெழுங்காய் வன்னியா—னெந்தை
௨௫ யருந்தவர்க ளென்று மமரரென்றும் பேரிட்
டிருந்தவர்க ளெல்லா மிரப்பப்—பொருந்தி
முனியா தவர்க்குவர முற்றுங் கொடுத்திங்
கினியார் வரவென் றிருப்பா—னினையாமல்
வேத வுணவு வெறுத்துப் புகழ்மூவ
ரோதுதமி ழுணுக் குழல்செவியான்—றுதையிகழ்
காலிற்குத் தக்க கணிச்சிகைச் சண்டிசொரி
பாலிற்குத் தக்க பழமலையான்—சாலிக்குக்
கைக்கரகத் துற்றிழியுங் காவிரிபோற் சென்றுசூழுஞ்
செக்கரிதழ்த் தாமரையின் றேன்பாய—வக்கமல
௩௦ வேடு கனலா யிடுபசும்பொ னென்பொகுட்டாய்
மூடு கரியரியாய் மொய்த்ததடம்—பீடுபெற

---

* கோசலைநாட்டிலே மணிபிங்கலைநகரத்திலே அந்தண குலத்திலுதித்த விவசித்தென்பவர் வறுமைமேலிட்டால் எங்கு முழன்று வருங்கால், ஒருவனத்தில் ஒரு தெய்வீகச்சுனையில் மூழ்கி, அங்கே குபேரனது தங்கையாற் கிடைத்த ஆபரணங்களைக் கைக்கொண்டு, ஒருகணநாத ருணர்த்தியவாறே விருத்தகிரியை யடைந்து,அசரீரியின்படி உரோமசமுனிவரநுக்கிரகம்பெற்று, அருந்தவம்புரிந்து பழமலைநாதர் கட்டளையின்படி அவ்வாபர ணங்களை வைக்கப்பட்ட வன்னிவிருக்ஷம் வேண்டியபொருளுப கரிக்க, அரிய திருப்பணி பலவும்புரிந்து சிவபதமடைந்தனர். இதன்விரிவை விருத்தாசலபுராணத்துட்காண்க.

ஞாலங் கருதுஞ்செஞ் ஞாயிற் றிரும்பகன்மால்
கோலக் கருதுங் குளிர்பொழில்வாய்க்—காலங்
கருதி யிருளிருப்பக் கட்செவிமா ணிக்கம்
பரிதியென நின்று பருகக்—குருதிபுரை
சேயொளிய பூண்மணிசூழ் திண்சுவர்முற் றுங்கவரின்
வாயி றெரிபளிக்கு மாடமுறத்—தூயசுதை
மாடநம் பிக்கு வழிவிடுவான் விண்ணெழுந்து
நீடு புனல்போல நின்றிலங்கப்—*பாடநக
௩ரு ரிந்திரனுக் கன்றிங் கெனக்கென்று வேளைசைத்த
பைந்தழைய தோரணம்வின் பாலசைய—வந்தணயி
ஞயகனு னீக்குறுயி னங்கை விளக்கவிப்ப
மேய மணிப்பூண் விளக்கேற்றச்—சேயிழையார்
முன்றிற் றுகண்மாற்ற மொய்குழலிற் பூந்தொடைக
† ளன்றிக் துகளா லதநிரப்ப—மன்றிற்
கொழுநன்சொன் மாதுகிளி கூறு தடக்கப்
பழகுமயற் பூவை பகர—வெழிலி
மறைத்திருந்து செல்லமணி மாளிகையை வேத
முறைத்திருந்து தீப்புகைபோய் மூட—நறைத்திருந்து
௪0 செந்தா மரைநாதன் றேரிற் பதாகையொடு
நந்தா மதிற்கொடிக ணட்பாடப்—பந்தாடு
மங்கையர்கள் செங்கை வளையொலிப்ப வேர்மலியும்
வெங்கை நகரிருப்பு வேண்டியே—பங்குபடு
பெண்ணுசை நம்பிபசும் பொன்னுசை பெற்றவுள
மண்ணுசை தானு மருவுதலால்—விண்ணுசை
கொள்ளுஞ் சிறப்புக் கொடுப்பத் திருவுளங்கொண்
டெள்ளுங் குறியவுரு வின்றுபோய்த்—தெள்ளுங்

---

* பாடமைகாவிந்திரன் என்றும்பாடம்.

† அன்றுதல் - பகைத்தல்.

கனவு நனவுபோற் காட்டி யிரந்து
மனைவியுமை யோடுமேணந்து—வினைவினர்க்குப்
௪௫ பண்டை யறத்தின் படிவமிது வென்னவுருக்
கொண்டவிலிங் கையன் குலமைந்த—னுண்ட
படிதாங்கி மாயன்றேர்ப் பார்தாங்கி யாங்கெங்
குடிதாங்கி நல்லிசைமென் கோதை—முடிதாங்கு
கல்வியுறுநீல கண்டன் றுணைவனலர்ச்
செல்வி யுறையுந் திருமார்பன்—வல்விரகம்
பூண்ட மடந்தையரே பொல்லா னெனுநல்லான்
றூண்டு திகிரிச் சுமைதுறந்தான்—யாண்டு
மிலையென்றல் கேட்பவுமின் னுதென் றிரப்போர்
நிலைகண்டாங் கெப்பொருளு நேர்வோ—னலையுண்டு
௫0 பாலாழிக் கின்றுநிலை பான்மதிக்கென் றெருப்பிகந்து
தோலா துலகனைத்துஞ் சூழ்புகழான்—மேலாய
செங்கமல வாணற்கே செந்நாவின் மேவுதல்வெண்
மங்கையெனு மவ்வுரையை மாற்றியே—சங்கையற
மூவுலகு ளோர்க்கு முதுசீர்த்தி வெண்மங்கை
நாவுறைய வைத்த நலத்தினுன்—றேவிகலி
வந்துதன்சீர் பாடுநா மண்மீதி லந்நிலையே
யிந்திரன்றா னுக்கு மியல்பினு—னிந்தையற
வுண்டு பணையலரென் றெண்காவைக் கீழ்ப்படுத்திக்
கொண்டு புனைதீர் கொடையினுன்—கண்டுபுகழ்
௫௫ பண்பு மலாது பயனும் புணர்ந்துநிதித்
தண்பதுமம் வென்ற தடக்கையான்—வண்புலவர்
தம்மைவிழி காக்குந் தகவி னிமைபோலச்
செம்மைபெறக் காக்குஞ்சீருடையான்—மெய்ம்மைபெற
நல்லா ரொருவ ருளரே யவர்பொருட்டா
லெல்லார்க்கும் பெய்யுமழையென் றமுனஞ்—சொல்லாடு

மைய மகல வகிலமெலாந் தற்சுட்டிப்
பெய்யுமழை யென்னும் பெயராளன்—றுய்ய
மறையோர் மிடிப்பகைஞன் வாய்மைநா மென்று
மறையோ மெனப்பொய் யறைவான்—முறையோதி
சுu0 வேலியறஞ் செய்ய விளைத்துக் கரும்பயிலக்
கூலி கொடுக்குங் குலத்தோன்றன்—மாலிரவு
மார்த்தி விருந்தா லடையாக் கதவழகு
மாத்திரையாய் நின்றொளிரும் வாய்தலான்—பூத்தபொ [ரு
ளேதப் படாம லிருந்துதவ நல்லறமென்
பூதப் படியுட் புதைக்கின்றோன்—வேத
னிலம்பெயர்த்து வைத்த நெடுவேரிற் சென்னி
குலம்பெயர்த்து வைத்த குணத்தான்—றலம்படைத்தோ [ன்
கண்ட குலத்திற் கருதி னிரட்டியாம்
பண்ட குலத்தின் பயனானோன்—மண்டலிகர்
சுரு நல்லகோ லின்று நவைக்கோ லெனச்செயுங்கோல்
வல்லகோ லண்ண மலைவள்ளன்—மல்லலுறச்
சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழற் புதவணித்தா—முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயி லுள்ளிருந்தெம்
பையுள்போக் கிற்கும் பரஞ்சோதி—மையுள்
ளிருந்தபுன் மாக்கடமை யென்றுந் துதியா
வருந்தவென் முன்னின்ற வள்ளல்—வனைந்தவிடை

---

## ப வ னி.

தன்மதியி லென்றாழ் தனதுமதி காட்டியுறப்
பொன்மலியுங் கம்பம் புகவேற்றிச்—சொன்மலியு
எ0 மிந்திரனு மேனோரு மேத்தத் திருவுலா
வந்தருளு நல்விழவுண் மற்றொருநாட்—சந்தமறை

முன்னூல் வடிவுகொடு முந்நூல் புனைந்தன்ன
பொய்ந்நூ றருமறையோர் போந்தெள்ளி—னெய்ந்நூறு
மாமஞ்ச ணெல்லி வருமானைந் தையமுத
மேமந் தருநெய் யிளவெந்நீர்—தேமுந்து
வில்வநீர் கர்ப்புரம்பால் வெண்டயிர்செந் தேன்கரும்பின்
செல்வநீர் பல்கனியின் றீஞ்சாறு—நல்விளநீர்
சந்தன மென்பனிநீர் சங்கப் புனன்முதலா
வந்தன கொண்டுதிரு மஞ்சனத்தோ—டுந்துதிரைக்
எரு கங்கை நிறந்திரியக் கன்னிப் பிறைதிகைப்பப்
பொங்கி யலைத்துப் புறம்போந்து—செங்கயல்கள்
பாயுந் தடமாப் படர்சடைமீ தாட்டியபி
னேயுங்கற் பான்மலைமா னெள்ளாத—மாயும்
புலியுரி மாற்றிப் புனைமணிய பாம்பின்
மெலியுரி யன்ன துகில் வேய்ந்து—வலிகெழுநற்
பஞ்சவ னென்ன முடிசூட்டிப் பார்வைக்கீழ்ச்
செஞ்சுடர்ப்பொற் றட்டிற் றிலகமுமிட்—டுஞ்சனிகர்
காதிற்குந் தோளிற்குங் கண்டமணிப் பூணென்னச்
சோதிக் குழைகள் சுமப்பித்து—வாதிப்பி
அ0 லுண்ட வழனஞ் சொழுகிப் பரந்ததெனக்
கண்ட முழுதுங் கருஞ்சாந்து—கொண்டணிந்து
பொன்னனையார் நெஞ்சியங்கப் பூங்கலவைச்சேற்றிலிடுங்
கன்னிரைபோன் முத்தவடங் கைபுனைந்து—தந்நிகர்பைந்
நாக நினைவுவர நாறு மலர்த்தாம
மாக முழுது மணிந்திட்டுப்—பாக
மதிய மணியிழைத்து வைத்தன்ன செம்பொற்
புதிய மதாணி புனைந்து—நிதியவணி
மாத்திரைதா னன்றி வளைவடுவுங் காக்குமெனச்
சேர்த்தினர்கே யூரந் திகழ்வித்துச்—சாத்தியபூ

அரு ணென்ன மழுமா னியைந்த விரலல்ல
மன்னமணி யாழி மலிவித்துத்—தன்னுழியக்
கைசெய்த வீரக்குக் கட்டியதாய் முற்றுமன்
மொய்செய்த காலன் முரண்முருக்கி—மைசெய்த
மேனி யரக்கன் விறலோர் கணத்தழித்து
வானி னடுத்த மதிதேய்த்துத்—தானுடைய
வென்றிக் கணிந்ததென வீரக் கழலொன்று
ளொன்றிக் கிடப்ப வொளிர்வித்து—மன்றற்
புகைமுதனின் றேந்திரறும் பூங்குவளைத் தீப
வகைமுதல கொண்டுபணி மாறித்—தகைமை
கூ0 வலக்க ணிடப்பா லிடக்கண் வலப்பாற்
கலக்க நிழலாடி காட்டி—நிலக்கலமும்
பொற்கலமு மன்ன மறையும் புகழ்மூவர்
சொற்கலையு மோத்துத் துதிப்பவிருந்—தற்கதிர்தன்
னங்கர் திரண்டமுத தாரையொழுக் கானதெனத்
தங்கு மணிப்பிடிய சாமரைக—ளங்கசையச்
சாந்தாற்றி பேர்முரணித் தாமரைமுத் தன்னவெயர்
போந்தாற்றி ஞாங்கர்ப் பொலிவெய்த—வேந்தாற்றற்
பிள்ளை மதியினைமுன் பெற்றெடுத்த தாய்மதிபோல்
வெள்ளை மணிக்கவிகை மேனிழற்றத்—தொள்ளைவளை
கூரு யொன்று யிரம்வா யொலிக்கு மவைபோன்று
சென்று யிரமெண் டிசைவிழுங்கக்—குன்றுத்
திரண்டா யிரங்கை தெழிக்குமது போற்கை
யிரண்டான் முழவொன் றிரங்க—மருண்டார்நன்
னந்திகரங் கொண்டதென நற்றண் ணுமைமுழங்கச்
சந்தமறை யோன்விழையுந் தாளங்கண்—முந்ததிரக்
கண்ணன் மலர்வாய்க் கழையெறிந்து பின்றொடர
வண்ணவிசைக்குழல்கள்வாய்த்தொலிப்ப—மண்ணியங்க
ளேனையபா தாளத் திறையரவும் விண்ணரவும்
வானுருமே றென்ன மலிந்தார்ப்ப—மீன

கoo வலைப்புதல்வி போற்றுபெரி யம்மைப் பெயர்கொண்
மலைப்புதல்வி தன்கொழுநன் வந்தான்—ஞுலைப்பின்
முதுகுன்றம் வெங்கையென முன்னுங் கருணை
மதகென்ற கண்ணுடையான் வந்தா—னிதுகுன்ற
மென்னு மழவிடையான் வந்தா னெனக்கோடி
சின்ன மமுதஞ் செவிக்குகுப்ப—மன்னுசிவ
செந்துவர்வாய் மங்கைபங்க தேவாதி தேவவென
வந்திகர்நின் ருர்க்குமொலி வானளப்பப்—பந்திமணி
மாடக் கரைசேர் மறுகிலஞ்சி மன்பதையா
நீடப் புதுநீர் நிறைந்தொலிப்ப—வாடச்
கoரு சிலர்செந் தழற்கொழுந்து சேட்போய் விழல்போற்
பலர்செந் துகிலெறிந்து பற்ற—மலர்சிந்தி
யும்பர்மே னிற்ப வுலகநெருக் காலுயர்த்த [னெடுந்
தம்பதுமக் கையெளிதிற் ருங்குவிப்பச்—செம்பொ
தண்டுமிசை கொண்டு சகமீன்ரு டன்னையுடன்
கொண்டுமணி வீதி குறுகியே—பண்டு
சிலையாகி நொய்துபட்ட நீதகல மேரு
மலையாகி நின்றவா வந்த—நிலையாகி
நாரணனாய் விண்ணுயர்வா னன்னிறத்தாற் செங்கமல
வாரணனாய் மிக்க வணியினுல்—வாரணனாய்
ககo நின்ற பசும்பொ னெடுந்திருத்தேர்க் கண்டுவந்து
மன்ற விளங்கதிர்போல் வந்தேறி—வென்றிதரு
* தந்தி முகன்முருகன் சங்கரிகற் சண்டியிவர்
தந்த மரபிரதந் தாங்கடவி—வந்தணயக் [ஞ்ச
கட்டளைக்கற் பொன்னுரைபோற் காற்பொன் மறுகுரி
முட்டிமுடிப்பொன் விண்முகடுரிஞ்சப்—பட்டுடைத்
[தேர்

---

* தந்திமுகன்முதனஞ்சண்டியீருயினோர் என்றும்பாடம்.

கண்டோர் விழிகள் களிப்ப நிலைபெயர்த்துத்
திண்டோ ளிறைவன் செலுத்துதலும்—பண்டோர்

---

## தழாங்கள்.

சிரந்துணிந்தா னோடமர்ப்பச் சென்மதற்கு வேத
னிருந்து படைத்தபடை யென்னத்—திருந்திழையார்
௧௧௫ முற்றினர்முற் றூத முலையிற் பெருவாழ்வுஞ்
சிற்றிடையி னல்குரவுஞ் சேர்ந்துளார்—முற்று
மமைக்கு நிகர்தோ ளணங்கா தலைத்தம்
பிமைக்கும் விழியா லிருப்பார்—சுமைக்கு
வருந்து நுசுப்பென்று வாணுதலிற் றீட்டுந்
திருந்து திலகஞ் சிதைப்பார்—பரந்தனுமி
ஞூதித் திரியும் பலமலரி னுண்மணம்போற்
பேதித் தமையுமிகு பேரழகார்—மோதிக்
கிழியா முகில்சிதைக்குங் கேதனப்பொற் றேரோ
னழியா வெரிதீ யழகை—விழியால்
௧௨0 விழுங்கினு ரேது விளையா தினிமெய்
புழுங்கினுர் மாலை பொரிந்தார்—செழுந்தரள
மாலை பொடிந்துவிழி வார்நீர் கலந்தொழுகிப்
பாலைமொழி யார்பா ரதிபோன்றூர்—மேலைநாட்
கூற்றை முனிந்த குழைகழலு முப்புரத்தி
னூற்றல் களைந்த வணிநகையும்—போற்றிலராய்த்
தம்மைநோய் செய்த தறுகட் சிலைமதற்காய்
வெம்மை விழியே வியந்திடுவார்—செம்மைத்
தவங்கொண்டோ மாதுமையா டன்னழகுகொண்டோ
வெவன்கொண் டிடமளித்ததென்பார்-தவங்கொண்டே
௧௨௫ லாக வழகா லளித்த திடமாகிற்
போகவிடே மென்றெதிர்தாம் போகுவா—ராக

மருவு மதினென் மடங்கு பிறைப்பே
ரிரவி தனைமறைப்பி னென்பார்—பரவுறுபீர்
கன்றுபயிர் மேயக் கடாவின் செவியரிந்தாங்
கின்றுதலை வற்கா ணிணைவிழிக—ணன்றிருப்பக் [க்குச்
கொங்கை யழகழியக் கொண்டதென்பார் கொல்பவர்
சங்கரனென் னும்பேர் தகாதென்பார்—மங்கையுமை
கொங்கைவடுக் கண்டுங் குழியவுரம் பாயாத
வெங்கண் முலைக்குவலி யில்லென்பார்—செங்குதலைப்
கருo பிள்ளைப் பழியாளர் பெண்பழியை யஞ்சுவரோ
வெள்ளத் தனையேனு மின்றென்பா—ருள்ளுக்
குருகுவார் நெற்றிபுடைத் தோவிதியே யென்பார்
பருகுவார் போலிறையைப் பார்ப்பார்—முருகுவாய்
தங்கமுத மும்பெருர் தாழ்குழலிற் பூப்புனையா
ரெங்கள் விழிக்கிவர்தாம் யாரென்பார்—பங்குவரு
மார மணிமார் பணையக் கிடைத்தாலும்
பார முலைக்ககலம் பற்றுமோ—நேருகினுங்
கங்கையறி யாமற் கலக்கு மிமையமலை
மங்கையறி யாமல் வருவரோ—மங்கை
கருரு யறியாமற் கங்கை யணையு மவரென்
னெறியால் வராரொன்று நிற்பார்—குறியா
விணைவிழியா னோக்கா ரெனினு நுதன்மே
லணைவிழியா னோக்கினுமா மென்பார்—கணைவிழியா
ரேந்திளங் கொங்கை யிடைவருத்தன் மாத்திரையாய்ப்
போந்தன வென்று பொருமுவார்—நாந்தவஞ்செய்
தில்லோ மதனு லினையாம லென்செய்ய
வல்லோ மெனத்திகைத்தார் மற்றொருத்தி—நல்லோர்

## * பேதை.

பொதும்பர் வனம்யாம் புகுவோ மிவடான்
பெதும்பையா முன்னமெனும் பேதை—குதம்பை
௧௩0 விழிமேவுங் காதுதோண் மேவப் புனைவாண்
மொழிமேவும் வீணை முனிவாள்—பழிமேவுங்
† கல்லார் பரன்முற் கரத்தல்போற் றன்கண்மூ
யெல்லார் முனுங்கரந்தே னென்றிருப்பாள்—பொல்லாத
வெம்பு பகையாகி மேல்விளைவ தோராம
லம்புலியை வாவாவெனவழைப்பாள்—செம்பொனுயர்
தெற்றிமிசை மென்னடைய தென்றல் வரவேற்றுச்
சற்றுமுள மஞ்சாது தங்குவாள்—பற்றுதவு
தன்பெருமைபொன்னறியாத்தன்மைபோற்பெண்ணரசா
தன்பெருமைதானறியாத்தன்மையாள்—பொன்பரிவி [ந்
௧௩௫ ஞெக்கலையிற் கொள்ளி ஞெளிர்பொன் மணியிருப்பிற்
றக்கவளல் லாரொடுக்கத் தக்கிலாண்—மிக்க
வடிவழகுக் கேற்ற மணவாளன் ஞனைப்
படியுளனென் ஞராயும் பண்பாண்—முடிவி
லுருவழிந்த வேளை யுரியனெனக் கூறும்
பொருவழிந்த வோர்குறையும் பூண்பா—டிருவழங்கு
பொன்னேயெழின் முளையேபூங்கொடியேபெண்ணரசே
மின்னே மயிலே விழிமணியே—யன்னே
வருக வருகவென வாராது தாய்நெஞ்
சுருக வுருக வுழல்வாள்—பெருகறிஞர்
௧௫0 நெஞ்சம் புரைய நிகழ்வுற் றெருசிறிதம்
வஞ்சம் புகாத மதர்விழியா—டுஞ்சி

---

* ஐந்துமுதல் ஏழுவயதளவும் பேதை.

† கல்லார்பரன்முன்னர்க் கரத்தல்போற் றன்கணமும் என்றும்பாடம்.

விழுந்த கதிரோ யெழல்போல் விழுந்த
தெழுந்ததென வொக்கு மெயிற்று—ளழுங்கவுர
மீக்கா ணளவும் வெளிப்படா வுட்பகையை
நோக்காது வாழு நுசுப்பினாள்—சீர்க்காமன்
மாதரமூக் காற்றால் வடிவிழிவு காணுமற்
பேதை யெனவிகழும் பெண்பெருமாள்—காதலுளந்
தள்ளத் தமர்போற் றமரலா ரும்மகண்மை
கொள்ளக் கருதுங் குறியினாள்—பிள்ளைப்
கருரு பருவத்தா லொத்துப் பகல்விளக்குப் பட்டாங்
குருவத்தா லொவ்வா ரொடுதான்—றெருவிற்போய்ச்
செங்கணெடு மாலுந் திசைமுகனு மீசனெனப்
பங்கமொழி கூறும் படியென்னச்—சங்கம்
பழிக்கும் வழுச்சொற் பதர்சேர்த்து வைத்த
விழுக்குங் கவியென்ப தென்னக்—கொழிக்கும்
புழுதியளைந் தில்லமெனப் போற்றிவிரற் சோல
மெழுதிவினை யாடி யிருக்கும்—பொழுதிலிசை
வேதச் சிலம்பு மிளிர்பதத்தான் மூவெயிலுங்
காதச் சிலம்பு கரங்கொண்டா—னாதப்
கசுo பணையா னறிய பசுந்துழாய் நாக
வணையா னறிய வரியான்—றுணையா
யடியவரைக் காக்கு மருளான் பனைக்கைக்
கொடியவரைக் காக்குங் கொலையான்—கடிகொள்
பனியிதழி மாலைப் படர்சடையான் வெற்பின்
கனியிதழி மாலைக் கழியா—னினியநறுங்
காவிக் கரிய களத்தினா னெம்முடைய
வாவிக் கரிய வமுதானான்—பாவித்
தருகு மகத்தை யுவப்பா னிகழ்வா
லருகு மகத்தை யழிப்பான்—பெருகு

கசுரு முருப்பவள மாய வொருவ னிரதி
விருப்பவள மாய விழித்தான்—பொருப்புவளர்
மங்கைக் குழையாய் மழுத்தனக்கென் றேந்துவோன்
சங்கைக் குழையாச் சமைத்தபிரான்—வெங்கைப்
பழமலையா னாளும் பதியிலான் சிற்ற
மெழமலையா னாளு மிறைவன்—கெழுமலையான்
வாழி யரம்பையர்தாம் வண்டலயர் பேதையராப்
பூழி யெழுந்தளகம் போய்ப்படிய—வாழிநெடுஞ்
செம்பொற் கொடித்தேர் திருமறுகி னூர்ந்துவர
வம்பொற் கொடிகுறுகு மன்னையரோ—டும்பர்க்
கஎ௦ கரியா னெதிர்சென் றவர்தாழத் தாழ்ந்து
பெரியா னிலைசிறிதும் பேதை—தெரியாம
லன்னைமீ ரித்தே ரமர்பவன்யார் மைந்தனிது
பன்னுகவென் றுடைமுதல் பற்றுதலு—மின்னனையார்
வற்புறுத்த வோர்பொருளை வள்ளுவனார் பத்துமுறை
சொற்பொருத்தி யோதுந் துணிவுபோற்—றற்பதத்தா
லோதும் பிரமமொரு தானென்ப தொன்றனைமால்
காதுபவம் பத்தெடுத்துக் காட்டினோன்—சாத
மிவட்குறா மேதென் றியம்புவமென் றெண்ணித்
துவக்கும் வினைவழியாற் றோன்று—மெவர்க்குமிவன்
கஎரு றந்தையே யன்றித் தனையனு காதவன்கா
ணந்தமில்சீர்க் காரைக்கா லம்மைதனை—முந்தொருநா
டப்பா வருளாற் றனக்கம்மை யென்றவன்கா [ட்
ணப்பா வெனுமொழியு மன்பினாற்—றுப்பா
ரயிலேர் மகன்மாட் டறிந்தவன்கா ணெங்கண்
மயிலே யெனவுரைப்ப மற்றும்—வெயிலே
ரிழையா ளிவனா ரெவனுரையு மென்ன
வுழையா ரிவனூர்கம் மூர்தா—னழையாய்

விளையாட வென்று நகைத்து விளம்ப
முளையா முலையிளையாண் மோகங்—கிளையாள்
௧௮0 படிவ நனிநன்கு பார்த்தா டவமு
முடியி லிளம்பிறையு முன்னாள்—வடிவழகன்
கையி லிளமானுங் காதலியா ளெம்பெருமான்
மொய்யகலம் வேய்ந்து முருகுயிர்க்குஞ்—செய்ய
கடுக்கையினைப் போதே கருத்தாழ் நடாத்த
மடக்கொடியிவ் வீசர்தோண் மாலை—யடுத்தெனக்கு
வாங்கி யுதவுமென மைக்கண் கலுழ்ந்துருகத்
தீங்கிலுமை பங்கன் றிருவிழவுள்—யாங்களிளம்
பேதையென வைப்பப் பெதும்பைச் செயலுமலான்
மாதிவளோர்மங்கைசெயன்மன்னினாள்-யாதினியாஞ்
௧௮௫ செய்யுஞ் செயலென்று சிந்தித் துளங்கலங்கிப்
பெய்யுஞ் சிறுவளைக்கைப் பெண்ணமுதே—யையன்
றிருத்தார் வினக்கிரத்தல் செய்தும் புனைதற்
குரித்தா முலைவந் துரத்திற்—பருத்தாலென்
றோதிக் கலுழ்கை யொழித்தா ரிவளென்று
பேதைப் பருவம் பெறுகையா—லாதிப்
பெருமான் விடுத்தகன்றான் பேரருளாற் பாகத்
தொருமா னிவட்பார்த் துவந்தாள்—பொருமார
னூறடுத்த கோடி நுனைப்பகழி கொண்டாலு
மாறிவட்கென் செய்வான்வறிதகன்றான்-வேறொருத்தி

---

## * பெதும்பை.

௧௯0 சீர்க்கு மிளைஞராந் தேன்முரலும் போதாகப்
பார்க்கும் பெதும்பைப் பருவத்தாள்—யார்க்குந்
தனைக்காணில் வாய்நீர் தரும்புளியி னுண்மா
றனைக்காணி னல்குமொரு தைய—னனைக்காம

---

* எட்டுமுதற் பதினொருவயதளவும் பெதும்பை.

முள்ள மரும்ப வுணர்வுடைய யோகிகட்குங்
கள்ள மரும்புகயற் கண்ணினுள்—கொள்ளுந்
தகவையிரு பங்காக்கித் தாமிருப்பக் கண்கண்
முகவினடு விட்டசுவர் மூக்கான்—மிகவும்
புரிந்தநெடுங் கூந்தற் பொறைவருமுன் னானல்
வருந்துநறுஞ் சந்த வளையா—டிருந்த
௧௯௫ மனங்குழைக்கும் பெண்வளர்த்தான் மானக் குதம்பை
கனங்குழைக்குநல்கும்வார்காதாண்—முனங்குழைக்கு
மண்விடுத்துப் பூசு மணங்குழைப்பாண் முன்பிறழ்ந்த
வெண்விடுத்துச்செவ்வணியம்புவாள்—பெண்விடுத்துப்
பூமங்கை யாணவாம் பொற்பினுள் கல்விகொடு
பாமங்கை தாளிற் பணிகுவாள்—காமன்றன்
வல்லியிவள் போலுமவள் வாட்போலுங் கண்ணினள
வில்லைபுகுந் தாயி னெனப்படுவாள்—மெல்ல
விடையபிரா தாழி யெழுங்கதிர்முன் றோன்று
முடிநுனிபோற் றோன்று முலையா—ளடியழகு
௨௦௦ பூழி யழிப்பப் புறந்திரியா டற்போற்றுந்
தோழியர்தா முயிரவர் சூழ்ந்துவரக்—கேழி
னிலைய வுறுப்பு நிகரா தவற்றின்
வலைய மலைப்ப மனங்கொண்—டிலகிலஞ்சி
சென்று புகுந்தவளர் சில்லோதி தன்பகையா
மென்றுநெடும் பாசி யிடையொதுங்க—மன்றனறுங்
காவிவிழி கண்டுகுப்பக் கண்ணீர் குழைபகைத்த
வாவிபடர் வள்ளை யடிதுடக்கத்—தாவிதழ
வாம்பன் மலர்வா யதுகண்டு வாய்திறப்ப
* மேம்பல் வளைகழுத்தால்வீழ்ந்தொளிப்பக்—கூம்பன்
௨௦௫ முகைகண்டு தாழ முலையை முழந்தாட்
பகைகண்டு ஞெண்டளைகள் பார்ப்பத்—தகைகொண்டு

* மேம் - மேன்மை. செய்யுமென்னும் எச்சமுமாம்.

வாய்ந்தகணைக் காற்கு வராலிரியத் தாட்புறக்குப்
போந்த கமடம் புறங்காட்டக்—காந்தளுடை
தன்னெதிர்கஞ் சஞ்சிவந்து சாயாது நிற்பக்கை
யங்கிலேயிற் கொய்தாங் கதுபற்ற—மின்னனையா
ளாடவரோ டாடினு ளாகப் புனலாடி
மாட மணிமறுகில் வந்துறலு—நீடு
கரும்பு மலருங் கலந்துவிழை வாக்க
விரும்புமதன் போன்மூலே வீதி—திரும்பிப்
உகO பரிதிநெடுந் தேர்வருதல் பார்த்தவக லல்கு
லிரதியெனத் தானுமெதி ரேற்றாள்—கருதி
னரிய நுதற்க ணரசையருள் காட்டுங்
கரிய மிடற்றமுதைக் கண்டா—ளுரிய
விறைவற்குத் தக்காங் கிறைஞ்சினு ளூலின்
முறைமுற் றிரத மூதல—குறைவற்ற
மல்கு விழவார வாரத் தகப்படா
தொல்கு மருங்கு லுமைமங்கை—புல்குந்
திருத்தோளிற் கண்வழிதன் சிந்தைபோய்க் காம
வெரித்தோற்ற மெய்துறுமவ் வெல்லே—யுருத்தோர்
உகரு பெருநாண் டடுத்துப் பிணைவிழியு ணீருங்
குருநாண் மலர்க்கைக் குருகு—மரநா
ணகல்கின்ற வல்குலிற்பட் டாடையுநிற் பிக்கப்
புகல்கின்று ளிம்முளரிப் பூவைப்—பகல்குன்றச்
சோதி தருமிவற்குச் சூட்டியக்கா னற்றிவன்று
னேதுதரு நல்கு மெனக்கென்ன— * வோதி
பெருகொருத்தி சென்றருகு பெண்ணணங்கே யின்பம்
பருகற் கிரண்டாம் பதமா—மருகிருத்த
லீந்தருளு மென்ன விறைவி யருகிருப்பு
வாய்ந்த முதற்பதமா வைத்தெண்ணிப்—போந்த

---

* ஓதி - அறிவு.

௨௨0 மனக்களிப்பு மல்கிமலை மாதையஞ்சி யீசன்
றனக்களிப்ப வெண்ணுமலர் தன்னை—நினக்களிப்ப
னென்ன வவடா னிவண்மனம்பே தித்ததெனுக்
கன்ன லனையமொழிக் காரிகையே—பொன்னிரத
மங்கை முலைகளோ வள்ளறடந் தோள்களோ
விங்கிவையி னல்ல வியம்பென்ன—வங்கவளுங்
கூறுது தன்கடைக்கண் கோமான் புயத்துறுப்ப
வேறுன துள்ளமெனன் மெய்யென்று—தேருக்
கோலமாலை வேற்கணுட் சோண்டமேட மாதர்
நிலைமாட வீதியய னீங்கச்—சிலைமாரன்
௨௨௫ கிட்டிக்கொண் டெந்தைமுன்செல் கின்றவிநாயகற்குக்
குட்டிக்கொண் டெய்யநாட்கொண்டகன்றான்-சுட்டிக்
[கொண்
டொப்பாக வோதற் கொருபொருளு மில்லான்றே
ரப்பான் மறுகி னடைந்ததா—லிப்பால்

---

## *மங்கை.

இலர்போ லவாவி யிசையளிக ளுண்ணுண்
மலர்போன் மலர்செவ்வி மங்கை—யலர்போ
தலைமங்கை செய்யா ளறவுங் கரியான்
மலைமங்கை சாலவுமென் மங்கை—கலைமங்கை
வெள்ளை யவட்கருத வேண்டா வெனுமங்கை
கள்ளை விடுத்துமதங் காண்மங்கை—கிள்ளைமொழிச்
௨௩0 செந்திருமென் கொங்கை திருமா றினைக்குங்காற்
புந்திதனிற் கொள்ளும் பொலிவினு—ளிந்திரன்றன்
ளுக்கத் தினைவிழையா வாற்று மருந்தவங்க
ணீக்கித் தனைநினையு நீர்மையாள்—சீர்க்கமல

---

* பன்னிரண்டுமுதற் பதின்மூன்றுவயதளவும் மங்கை.

வாதியயன் மீக்கூ ரரம்பையரை யாக்குங்கான்
மாதிரிகை யாகவுநும் வாய்ப்பினுள்—சோதிமணி
யன்று சுடரோன் றமைந்த மனைபுகினுங்
கன்று தளிர்மெய்க் கவினுடையா—ளின்று
திருத்தேர் விழாவென்று சேடியர்க ளீண்டி
மருத்தே ரளிசூழ் மலருந்—திருத்தே
உ௩ரு ரிழையுந் துகிலு மெனைத்துங் கொணர்ந்து
விழையும் படியணிய வேண்டக்—குழையு
மனத்தொடுமென் றூசு மணிமே கலையா
மினத்தொடு சேரவுடுத் திட்டுச்—சனித்தவிட
முற்றுங் கவரா முகின்முலைமுன் றூனையான்
முற்றுங் கருணைகொடு மூடினுண்—முற்றும்
புருவவணி மாறுப் பொருவிழிக்கு மையிட்
டுருவ மதியை யுவந்து—மருவுமொரு
பைத்த நெடியகரும் பாம்பென்னப் பின்னுமுன்
வைத்த குழலின் மலர்புனைந்தாள்—மொய்த்தபுக
உ௪0 ழீசற்குத் திங்களொன்றே யென்றுகதி ரும்பிறையும்
வாசக் குழன்முன் வகுத்தணிந்தா—ளேசத்
திலக மதிக்கிழிந்த சிற்றரவ மென்ன
விலகமணிச் சுட்டிபுனைந் திட்டாள்—கலகமிடக்
கண்ணிற்கு வேள்விடுத்த வோலையெனக் காதிற்கு
வண்ணப்பொன் னோலை வதிவித்தா—ளண்ணி
முயங்கு முரோணி முழுமதியோ டென்ன
வயங்குகொடி மூக்கா ரமாட்டி—யுயங்கிய
லேனை மதிமாத ரெல்லா மிருப்பதென
வானமணி மாலைகழுத் தார்வித்தாள்—மானவனை
உ௪ரு காக்க மணிப்பொற் கடகங் கரஞ்செறித்துச்
சேக்க வடியிற் சிலம்பணிந்தா—ளேக்கமுத

மன்னு ளொழிந்த வணிபலவுந் தாங்கினுள்
பொன்னு லியன்றவுருப் போன்றமைந்தாள்—பின்னு
இருப்பசி யன்ன வொருத்தி யளிப்பக்
கருப்புரமென் பாகு கவுட்கொண் —டிருப்பவொரு
மாது குறுகி மயிலேபொற் றேரொடுநம்
வீதிதனில் வந்தான் விமலனென—யாதும்
வருவதுண ராமன் மகிழ்ந்தெழுந்து நங்கை
பொருவதரும் வீதி புறப்பட்—டுருவதிலி
௨௫௦ யுற்றபெருந் தானையென வுண்கண்ணு மொண்கவுளும்
பற்றுபுகர் வாளும் பரிசையுமா—முற்றிழையா
ரெண்ணிலா ரீண்டி யிருமருங்கும் போற்றிவரத்
தண்ணிலாவேணியரன் றன்னெதிர்போ-யண்ணன்மே
வண்டு மலரென்னும் வார்சிலையி னேர்தொடுத்துப் [ல்
பண்டுமத னெய்த பரிசென்னக்—கொண்டு
விலங்க விழிப்பகழி விற்புருவ மேற்றி
யிலங்க வருமிறைதோ ளெய்தாள்—கலங்கலரு
மண்ணாருன் யோகநிலை யன்மையாற் றன்பரிதிக்
கண்ணினு ளேக்கவெரி காமத்தீ—யொண்ணுதலா
௨௫௫ ளாகநீ ருகா வளவுபோய்ப் பற்றுதலும்
போகமார் மாலை பொடிந்தொழியப்—பாகவாஞ்
சொல்லாள் பணியுட் டொலைந்தன வன்றியுள
வெல்லா முருகி யிலையாக—நல்லா
ரிதுவந்த தெம்மா லெனவுள்ள மாழ்கி
மதுவந்த கொன்றையந்தார் வள்ள—லெதிர்வந்து
நின்று தொழுவா னினையிங் கியாங்கொணர
வென்று மறியா விடும்பையெலா—மின்றிவட்குத்
தந்தா யுலகியல்பு தானுமலாற் புன்மாலை
வந்தால் வருத்தும் வளர்பிறையை—யந்தோ

உசுO சுமந்துவந்திப் போதே சுடுவித்தா யீது
னமைந்த திருவருளுக் காமோ—சமைந்தவொரு
கோதை யனையாள் குழலிசைய வண்டுறலான்
மேதைதரு கல்யாணர் வேண்டுதலாற்—போதுபல
பூத்த வவயவமாம் பொற்பினு லூறினிமை
வாய்த்தமையான் மாறு மணத்தினுற்—சீர்த்திபுனை
நின்றிருத்தோட் கேற்ற நிலையா ளணைந்தருளா
யென்றுரைத்து வேண்டுதலு மெம்பிரா-னன்றடுத்த
பங்குமையையஞ்சிப்படர்சடையில்வைத்தொளித்தாங்
கங்கையினை யிவ்விருவர் காணும—லெங்கிவளை
உசுரு நாமொளிப்ப மென்னு நடாத்தினுன் பொற்றிருத்தேர்
காம னடுத்துக் கணைமாரி—கோமளப்பொன்
வஞ்சிமிசை தூர்த்து வருந்திக்கை விட்டகன்று
னஞ்சனவேற் கண்ணு ளவட்கப்பாற்—கஞ்சம்

---

## * மடந்தை.

அடங்கு பொகுட்டி னமர்திருவிற் கோடி
மடங்கு கவின்கூர் மடந்தை—நுடங்கு
கொடிமின் னொழுக்காக் குளிர்புயன்மே னின்ற
படிமன்னு கூந்தலுடைப் பாவை—தொடிமன்னு
செங்கைக் குமாரவேள் செவ்வேலை யொப்பாக்கச்
சங்கப் புலவர்க்குத் தானுரைப்ப—வங்கடுத்து
உஎO மாரவே ளம்பாக்கின் வார்புருவக் கென்சிலையு
நேருமே யென்னு நெடுங்கண்ணுள்—சீருலாங்
காரளகம் வின்னுதல்வேற் கண்குமிழ்மூக் கூசல்கா
தாரமெயி றும்பவித ழாடிகவுள்—வேரறேள் [டை
காந்தளங்கை யோதிகொங்கை காயமிடைவாழைதொ
மாந்தளிர்செங் தாளென்று மாதரெனப்-போந்தவர்க

---

* பதினன்குமுதற் பத்தொன்பதுவயதளவும் மடந்தை.

ளெல்லார்க்கு மொப்ப விசைப்பவற்றை யொப்பாக்கல்
பொல்லா தெனவுயர்ந்த புத்தமுத—நில்லாமன்
மாதவர்கண் மால்கொள்ள மால்கொண்ட பெண்ணுரு
யாதுமழ இல்லை யெனவந்தாள்—கோதி [வும்
உஎரு றறவறமொன் றுண்டென்று சொல்லுமுறை தற்கண்
ணூறுமளவு மென்னு முருவாள்—பொறியரவு
மந்தர வெற்பு மறிகடலு மின்றமுதந்
தந்தருளும் செவ்வாய்த் தளிரியலாள்—செந்திருவோ
டொத்தக லாத வுயிர்ப்பாங் கியைவிளித்து
முத்த மணல்பரந்த முன்றில்வா—யித்தலையில்
வென்று * ளுடைந்தாள் விரிபசும்பொற் பூண்கொள்க
வென்றுள் பொருந்தி யிளந்தளிர்க்கைக்—கன்றுடக்
காமர் மணிமே கலைகலிப்பப் பூணொலிப்பச்
சேமவிடை யின்றென்று தேராத—தாம
உஅ0 முலைமேற் றுகிலுடங்க முண்டகச்செம் போதிற்
சிலைமேற் சிறுவியர்வு சேர—தலைமேற்
சுரும்பரெழுந் தார்ப்பத் துகண்மாலை தூர்ப்பக்
கருங்குவளைக் கண்பிறழ்வு காட்டப்—பெரும்புவியின்
முந்தடித்துச் செல்வ முறையாற் றொடர்வதென
வந்தாத்து மங்கை யடுத்தெழுவான்—பந்தடித்துப்
பூவை விளையாடும் போதி லொருமூவர்
பாவை விழையும் பழமலையான்—கோவை
யெழுதுந் திருக்காத்தா † னெய்யாமல் வேத
முழுதும் புகழு முதல்வன்—றொழுதுந்
உஅரு துதித்து முழுநாட் டொலைப்போ ருளத்தான்
விதித்து வருமோர் வினையுந்—திதித்தொழிலுங்

---

* உடைந்தாள் - தோற்றவள்.

† எய்யாமை - அறியாமை.

கொள்ளுமவ ரோடுலகங் கோறற் றெழில்புரிந்துந்
தெள்ளுமரு ளாண்மை சிதையாதா—னுள்ளுமறை
கற்றும் பிறரைக் கடவுளென்பார்க் காண்கைமுதற்
குற்றம்பொறுத்தெனையாட் கொள்ளுவான்—முற்றுந்
தனக்கடிமை யென்னுமாற் றம்பிரான் பூட்கைச்
சினக்கடிய வேழவுரிச் செல்வன்—மனக்கினிய
துங்க மணிநெடுந்தேர் தோன்றுதலும் வல்விரைந்து
நங்கைவரிப் பந்தொடும்போய் நண்ணினா—ளெங்கள்
உகூ0 கருத்தனைமுன் கண்டாள் கருநெடுங்கண் ணீரோ
பருத்த முலையின் பசப்போ—தெரித்தமலர்ப்
பைந்தெரிய லின்புலர்வோ பல்வளைக டுஞ்செலவோ
வந்தவளர் நாற்குணத்தின் மாய்தலோ—முந்தியதிங்
கேதோ வறியோ மிவையெலா மெய்தினாள்
காதோ டமர்செய் கயற்கண்ணாள்—மாதோர்
புறத்திருப்பக் கண்டுதான் புல்லியமேற் சேறன்
மறுத்தடுத்தோர் சூழ்ச்சி மனத்துட்—குறித்து
நினக்குவென்றி யாயி னினக்கே யிவர்தோ
ளெனக்குவென்றி யாயி னெனக்கே—யினக்கரியுங்
உகூரு கோடாத நின்பாற் கொழுநனே யென்றொடுபந்
தாடா யெனவுரைப்ப வப்பாங்கி—யோடா
வணங்கே யெனைப்போ லவளைமதித் தாய்கொல்
லிணங்கே ருனக்கொவ்வா ளேனுங்—குணங்கூ
ரிறைவி யலளோ விதுதகுமோ வென்ன
மறைவி யலனிவ் வழக்குப்—பெறவிவ்
விருவர்க்கு மோது மியர்கைத்தன் றென்னா
வுருவக் கொடிநெடுந்தே ரூர்ந்து—விரைவிற்
றிருத்து மிவள்பொற் றெருக்கடந்து சென்றான்
வருத்துமத னுண்டொழிய மற்று—மொருத்தி

---

* அரிவை.

௩௦0 தருமுத்தி வேறென்போர் தாமுந்தற் சேர
லருமுத்தி யென்னு மரிவை—யொருமுத்தி
வேண்டியுகங் கோடி விளைத்த தவங்கொடுத்துக்
காண்டலுந்தற் கொள்ளக் கருதுவா—ளீண்டிமதி
நள்ளிருள்சென் றுச்சி நணுகிற் குழலொடொவ்வா
வொள்ளெழில் வாண்முகத்தோ டொப்பாவாள்-விள்ள
நேர்ந்த விளைஞுரு நெஞ்சியங்கு மாறென்ன [லற
வார்ந்தநெடுங் கூந்தல் வகிரினாள்—சேர்ந்த
கயலிரண் டொத்துக் கடைசிவந்து நாப்ப
ணயலிருண்டு வெண்ணிறத்த வாகி—மயல்புரிந்து
௩௦௫ நீண்ட வடிவகன்று நேர்வள்ளை மீதோடிக்
காண்டகைய வாயினிகர் கண்ணினா—ளேண்டுசுட
ரன்ன மணிக்குழைக ளஞ்சனவேற் கண்டள்ள
மன்னவிருந் தாடேசல் வார்செவியா—டன்னு
ணிலவை விரித்தொடுக்கி நிற்குங் குமுத
மலருளதே லொக்குநகை வாயா—ளிலகவரி
மூன்றெய்தி யொள்வளைவெண் முத்து வடமாகக்
கான்றெய்தி னொக்குங் களத்தினா—ளீன்றெய்து
மாந்தளிர் முன்னாள் வரையன்றி யொவ்வாத
வேய்ந்தொளிர்பல்வளையமென்கையா—ளேந்திடைமே
௩௧0 லேயு மிருவா ரெழிலொருவா மிக்கவலி
வீயு மெனவெழுந்த வெம்முலையாள்—காயமெனப்
பொய்கூறியவறியேம் புண்டரிகத் தாளிழையின்
செய்கூறென் றெண்ணவுள சிற்றிடையாள்—மைகூர
நேர்ந்த வெறும்புகுழி நின்றெழல்போ லுந்திமிசை
வார்ந்த வுரோமமெனும் வல்லியினாள்—கூர்ந்தமணி

* இருபதுமுதல் இருபத்தைந்துவயதளவும் அரிவை.

நேமி வளைகொ ணெடியோன் றிருவுந்தித்
தாமரையை வென்றிகழுந் தாளினாள்—சோமமுடி
காண நடக்குங் கருத்தாற் பரந்தவன்ன
நாண நடக்கு நடையினாள்—வீணை
ருகரு கரங்கொண்டு செம்பவளக் கான்மணிமா டத்து
வரங்கொண்ட பொற்றவிசின் வைகி—மரங்கொண்ட
கோடு குழைந்து குழைப்பச் சிலைவன்மைப்
பாடு குழைந்து பழமாகப்—பாடு
மிசையால் விளர்ப்பெஞ்சா தெய்துகலை மான்கை
யசையா வியவா வயர—நசையா
னரம்புமொழி கற்க நவிற்றுங் குருவி
னிரங்கு மிசைபாடி யேற்றி—விரும்பமுத
மன்னா ளிருப்ப வவள்பாங்கி சென்றுமலை
முன்னா ளுருக்கு முனிவர்வை—யிந்நா
ருஉ0 ளசையா தடுத்த பழமலையை யன்ன
மிசையா லுருக்குவா யென்ன—விசையா
வெளிய திதுவென் றிசைவீணை யோடு
மளிய னெதிர்சென் றடைந்தா—ளொளிகொண்
மதியூர் முடியு மணாமே வடியுங்
கதிர்வேல் விழிகளிப்பக் கண்டாள்—கொதியா
வெருவுறப்பச் சென்று வெருவுற்றாங் கென்னே
மருவுறுக்குங் கொன்றை மலையை—யுருகுவிப்பச்
சார்ந்தாள் பழமலையாற் றானே யுருகுற்றாள்
சோர்ந்தாள் விழியருவி தூங்கினா—டேர்ந்தாண்
ருஉரு மொழிகற்ற வீணை முறையென்ன வீழ்ந்து
பழியற்ற தாளிற் பணிய—வொழிவற்ற
கோல்வளைக டோற்றாள் குவிமுலைகள் பீர்பூத்தா
ளல்வகைய பண்பு நழுவினாள்—சூல்வளையி

ஞெந்தா ளதுபாங்கி நோக்கி யருண்மலைமுன்
வந்தாடன் யாழான் மகிழ்வித்து—நந்தா
விசைபெறுவா னெண்ணி யிழந்தாண் முதலுந்
திசைபெறுவான் வந்தெழுந்து தீரா—வசைபெறுவா
னின்று ளெனக்கொண்டு நில்லாது போயினுள்
குன்றுத வன்பினொடு கூடவே—நன்றுரு
௩௩௰ மானுய ஞர்த மரியவிசைக் கல்லாமற்
கானுர் மலர்க்குழளாள் காமமொடு—தானுரு
மின்னிசைகேட் டுள்ளுருகற் கிம்மலைதானம்மலையோ
வென்னிசையச்சொல்கென் றெடுத்தியம்பிப்-பொன்ன
[விர்செம்
பூண்டயக்கு மென்முலையா ரேனையர்பின் போயினர்
காண்டகுநம் வெங்கைநகர்க் காவலா—னீண்ட
கருமா லுலகங் கடந்தான்றன் கண்க
டிருமா மலரென்ற தேற்றம்—வருமாறு
தொள்ளா யிரத்துத்தொண் ணூற்றொன்பதொண்மலரு
மெள்ளா விழியொன்று மிட்டவடி—யுள்ளான்
௩௩௫ மதனன் மலர்ப்பகழி மாரு மறுகிற்
புதுநன் மணித்தேரிற் போன—னதனில்

---

## *தெரிவை.

இருந்த பதினு யிரவரம்பை மாருட்
டெரிந்துமதன் வைத்த தெரிவை—திருந்த
நடந்தா லரசவன்ன நச்சப்படாத
தடந்தா மனைவென்ற தாட்கு—மடைந்தார்க்கும்
வண்டமை யாது வரியாழ் பயிலாது
தண்டளிர் தோல்வி தருகைக்குங்—கொண்டமணித்

---

* இருபத்தாறுமுதல் முப்பத்தொருவயதளவும் தெரிவை.

கண்ணின் றிருக்குங் கனக மலைவணங்க
வெண்ணின் றிருக்கு மிளமுலைக்கும்—புண்ணின்
௩௪0 றணங்குறுவ தன்றி யருள்புரியா வேலி
னிணங்கெறியு முண்க ணிணைக்கும்—வணங்கி
யொடியும் வரிசிலைநா ணுற்றிருப்ப தென்று
கடியு முரிபுருவங் கட்கு—நெடியமணி
வள்ளைக் கொடிபான் மருவிலகண் ணோட்டமெனக்
கொள்ளைக் கவின்கூர் குழைகட்குந்—தெள்ளூற்
றுவமைகூ றக்கருதி னொன்றற்கோன் றல்லா
துவமைவே றில்லா வுருவா—ளுவமை
கரியகுழ லாகக் கமஞ்சூன் முகிரு
னுரியபொரு ளாக வுரைப்பா—ளரியமலர்
௩௪௫ கொள்ளைகொள வெண்ணிக் குயில்கூவ நல்லாய
வெள்ளமொடு சென்றுபொழின்மேவினாள்-கள்ளழியப்
பூத்தகொடி தான்வருமுன் பூம்பணைகண் மீதேற
வார்த்தைகொடு கிள்ளை மருங்கிரியக்—கூத்தரென
வோதி முகில்கண் டுவந்து மயிலாடத்
தீதில் விழிகண்டு தேனினங்க—டாதில்
விழுந்து படிந்துருவம் வேறுகப் பல்வண்
டெழுந்துமலர் வாய்கண் டெதிரச்—செழுந்தரள
வெண்ணகையாள் கண்டு விடுத்துத்தன் மூக்கையெதி
ரொண்ணகையசண்பகங்களுள்ளவெலாம்-பெண்ணரசு
௩௫0 சென்று கவர்ந்துகனி சிக்கயாத் திட்டுமுலை
யென்று பெயரிய * வெற் பேற்றினாள்—மன்றங்
குறுகியிளந் தென்றலெதிர் கொண்டிருப்பச்சேணி
லுறுகொடிய தேர்தோன் றுதலு—மறுகி
னிரம்பு கதிர்நேர் நெருஞ்சியெனத் தன்பாற்
றிரும்புவிழி யாயமொடு சென்றாள்—குரும்பைமிகர்

---

* வெற்பேற்றிமணற்குன்றம் என்றும்பாடம்.

கொங்கைநீ ளுண்கட் கொடிமென் றளிர்போன்ற
வங்கைநீள் கூந்தலின்மே லஞ்சலித்தாள்—கங்கைநீர்
பாய்ந்துதளி ராது பவள நிறக்கொழுந்திற்
சாய்ந்துபடர் வஞ்சிச் சடையழகும்—வாய்ந்தசிலை
௩௫௫ யாக்கர் தருமதவே ளஞ்சத் திலகமென
நோக்கங் கிடந்த நுதலழகும்—பார்க்கும்
விழியாய்க் கிடந்தசுடர் மேல்வா சிகைபோன்
றழியாப் புருவத் தழகும்—பழியாப்
பரசு வருங்கை பழித்தருள்வந் தெய்தி
யரசு செயுங்க ணழகும்—வரிசைபடு
தொண்ட ரகத்தமருஞ் சூளா மணிவதன
முண்டகத்துக் கேற்றகொடி மூக்கழகு—மண்டுகருத்
தோடிமலை வேந்த னுலாவமுதுண் டென்கவிப்புன்
காடிமுனி யாதகுழைக் காதழகும்—பீடிசைய
௩௬0 வாத்தமொழி யாக வனைத்தும் பயில்வேத
வார்த்தை மொழியுமலர் வாயழகு—மேத்துறுதன்
னேவ லிருக்கு மிமையவர்மேற் சென்றவிடங்
காவ லிருக்குங் கழுத்தழகு—*நாவல்
விலங்கலுன் றிண்மை விடுத்து வணங்கு
மலங்கலுழ் திண்டோ ளழகு—மிலங்க
வெடுத்தமழு மானபய மேனை வரத
மடுத்தமல ரங்கை யழகும்—வடித்தகதிர்
வேலு மெனுங்கண் விளங்கிழைகொங் கைத்தழும்பு
மாறு வணியினுறு மார்பழகு—நூறுய
௩௬௫ வெண்ணிற் சிறந்த விதழ்மலரா டாழுநெடுங்
கண்ணிக் கணையாங் கவானழகு—நண்ணிக்
குடித்தாவி கூற்றெங் குடிமுழுது மாட்கொ
ளடித்தா மரையி னழகும்—கடித்தாம

* நாவல்விலங்கல் - மேருமலை.

மென்முலைகண் ணிற்கு விருந்திட் டமையாது
நன்மணிமுத் தும்புனைய நல்கினாள்—பொன்மலையை
வாரொழுங்கொங்கைபெரும்வண்ணத்தானுங்கடந்தா
போரொழுகும்வேளாற்பொலிவழிந்தாள்-சீரொழுகு[ள்
மைத்தமணி கண்டன் வதனத் தொடுவதனம்
வைத்துமுலை வேழமலை மார்புபொர—நெய்த்தகுழன்
௩௭0 மாது தழுவ மனங்கொண்டு பித்தளையச்
சூதுபொரு சந்தமுலைத் தோழிமார்—மூதுலகி
லாடவர்க டம்மி லழகனு மாயோனும்
பீடமையு மைத்தடங்கட் பெண்ணுருவாய்—கூட
விருந்த பெருந்தகையை யெங்குலப்பெண் வேட்டு
வருந்தறகு மென்று மதித்து—விரைந்து
மனையிற் கொடுபோய் மலரணையிற் சேர்த்த
வினைவுற் றுயிருண் டிலையென்—றனைவர்க்கு
மையம் விளைய வவள்சோர்ந்து பின்றெளிவுற்
றுய்யும் வகையே துரைமினென்று—ளைய
௩௭௫ னுருவெளியைக் கண்டா ளுழையரைச்செல் கென்று
ளுருவெளியைப் புல்கி யயர்ந்தாள்—பொருவெளிய
ரல்லரா மாத ரறிஞர்க்குத் தாமல்ல
தில்லரா யாண்டு மெதிர்நிற்க—வல்லரா
மீச ரிவட்கு மெதிர்நின்று ரென்றிருப்பப்
பாசமில ஞதி பகவன்றேர்—வாசவன்றன்
முன்னிறுத்த வஞ்சிறகர் மூரிவரை யூர்வதெனத் [தி
தன்னிலைப்பொன்வீதிதனிற்சார்ந்ததாற்-பின்னொருத்

---

## * பேரிளம்பெண்.

கண்ணிற் சிறந்த கருமணிபோல் வானவர்தம்
பெண்ணிற் சிறந்தவொரு பேரிளம்பெண்—விண்ணிற்

---

* முப்பத்திரண்டுமுதல் நாற்பதுவயதளவும் பேரிளம்பெண்.

௩௮0 குருமதிதா னெக்குமெழில் கூர்முகத்தை யொக்குந்
திருமலரி னுண்மலர்வு தீர்த்துப்—பொருமதர்வாட்
கண்ணெக்கு நீலக் கடிமலரை வாழ்விக்கப்
பண்ணெக்கு மின்சொற் படியிலாள்—விண்ணிற்
கிருசுடரின் மற்றென் றெழின்முகமொவ் வாம[வேன்
லொருசுடர்மன்பொற்பழிப்பவுள்ளாள்—பொருசுடர்
மாவடியை நோக்கி வரலொத்துக் காதளவுந்
தாவடிபோய் மீளுந் தடங்கண்ணாள்—காவடிபோற்
கண்ணுங் குழைதூங்கு காதுமுறத் தாங்குகரி
னண்ணுங் குமிழ்வென்ற நாசியாள்—ளெண்ணு
௩௮௫ முகைமுதல வெல்லா முறையொத் துவமைத்
தகைதவிர முற்றுந் தனத்தாள்—பகைமலரி
னுற்றமட வாரு ளொருவரே கல்விகவின்
பெற்றிடினன் றெவ்வாப் பெருமையாள்—பொற்றகடு
வேய்ந்தபவ ளக்கால் வியன்மா ளிகையொன்றி
லாய்ந்த புராணநூ லந்தணனை—வாய்ந்த
மடங்கலணை யுய்த்து வணங்கி மருங்குற்
றடங்கலருர் தீமூட்டு மண்ண—றொடங்குகதை
யொன்றோ துகவென் றுரைப்பவவ னோதுவா
னன்றோர் பகன்முக்க ணுண்டகைதான்—குன்றோ
௩௯0 டிணங்குமுலைப் பெண்ணுத லேலாமை யின்மா
லணங்குருவப் பெண்வடிவ மாகிக்—கணங்கொண்
முனைவர் தவமிழந்து மோகிப்பான் செல்ல
வனையர் மகளி ரமர்ந்த—மனையிற்
பலிமுகத்தா னாகிப் பலிக்கெய்த வானம்
புலிமுகத்தா ரெம்மான்முன் போந்தார்-கலிமுகத்துப்
புன்றுரும்பு போன்றலைந்தார் போற்றுமவிகாரிமுனஞ்
சென்று வருசொற் றிரிதல்போன்—மென்றளிரா

மேனி திரிந்தார்கை வெள்வளைகள் போக்கினர் [போ
வேனின் மதன்கணையால் வெய்துயிர்த்தார் - பானுரை
௩௬௫ லாடை குலைந்தா ரணைந்தாவி தாரீரென்
றேடவிழ்பூந் தாண்முன் னிறைஞ்சினர்—நீடழலிற்
காட்டு மரக்கிற் கருத்துக்கா ரென்னவுயிர்
கூட்டுண் மலர்க்கட் கொடியிடையாள்—கேட்டு
மடவார்கட் கெல்லாம் வசைவிளைத்தா ரென்றச்
சடைவா னவன்றனென் றன்பா—லடைவானே
னுவனகர் நம்பிபெரு நன்மணப்பூம் பந்தரிடைப்
பாவலர்முற் கூறும் பழிமொழியை—யாவர்களுங்
கூற வெருக்கணிந்த கோல முதவியா
வேறமடன் மாவையெளி தேற்றுவலென்—றூறமுத
௩௦௦ மன்ன மொழியா லறைதலுமக் கட்கனிமுற்
சின்ன முனிமகளிர் சிந்தைகவர்—தன்னனையான்
வந்தா னெனமுழங்க மாதெண்ண முற்றியதென்
றந்தா மரைத்தா ளணிசிலம்ப—முந்தா
விறைவனெதி ரேற்று ளெழிற்பெருக்கங் கண்ணுற்
குறைவ தறமுகந்து கொண்டாள்—கறைமிடற்றுப்
பண்ண வனைமொழிந்த பாவ முடன்பலித்து
வண்ணநறுந் தூசு * வளையொழியக்—கண்ணிணையு
ணீர்பெருக நெஞ்ச நிறையழிய மென்முலைகள்
பீர்பெருகச் செவ்வாய் பிழைபிதற்ற—வேர்பெருகு
௩௦௫ மாதவர்த மாதருற்ற வாறுமின்றிக் கையாற்றிற்
சாதலுறு வார்போற் றனைமறந்தாள்—கோதையா
டானே பழமலையைச் சார்ந்தசைப்பாளென் றுமொழித்
தேனே வெனுஞ்சொற் றிருமுகத்தில்—வானோர்
தனிநா யகன்முடியிற் றண்புனலீ தென்று
பனிநீர் தெளித்தளிப்பப் பாவை—முனியா

---

* மறையொழிய என்றும் பாடம்.

ளுணர்ந்தவச நீங்கி யொழிந்தாள் வளைகள்
புணர்ந்த முலைபசலை பூத்தாள்—கொணர்ந்த
தொடைபொடிப்ப வெண்டரளஞ் சுண்ணம் படமெய்
யிடையடுத்தார் நீங்குவெதுப் பேற்றாள்-சடையடக்கக்
௪௧0 கங்கைநீ ரன்றேயிக் கண்ணீ ரெனவழுதாள் [யர்கள்
பொங்கெரியின்வீழ்பறவைபோன் றினைந்தாள்-மங்கை
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயலென்று—மெல்லியலைக்
கொண்டு மனையிற் குறுக மலருண்டு
வண்டுபடுங் கூந்தன் மலர்விழியாள்—பண்டு
திருமாலு நான்முகனுந் தேடும் பொருளைக்
கருமா மிடற்றெங் கரும்பைப்—பெருமானைத்
தெள்ளமுதைத் தெய்வ சிகாமணியைத் தன்னடியா
ருள்ளுயிரைத் தோன்றா வுறுதுணையைக்—கள்ளவிழுங்
௪௧௫ கொன்றைப் பவளநெடுங் குன்றைப் பழமலையை
மன்றிற் குனிக்குமொரு மாமணியைச்—சென்றுற்
றுளத்துப் புணர்ந்துவிடா தோங்கின்ப முற்றாள்
இளத்தற் கரியபெருங் கீர்த்தி—வளத்தொடுறு
நாடு நிலைநிற்ப நம்பன் செலுத்தப்போய்
நீடுதிருத் தேர்நிலையி னின்றதா—லாடு
படைக்கண் மகளிர் பலரிவ்வா றாகக்
கடைக்க ணருள்சிறிது காட்டிச்—சடைக்கண்
௪௧௬ ணிலாவினான் வெங்கை நிலையினா னாதி
யுலாவினான் போந்தா னுலா.

## நேரிசைவெண்பா.

பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீறாக
வோதை யெழுகடல்போ லோங்கினார்—காதலுறச்
சிந்தா மணிநெடும்பொற் றேரிற் றிருவுலாத்
தந்தான் பழமலைநா தன்.

## சிறப்புப்பாயிரம்.

வெங்கைப் பதிப்பழய வெற்புக் கணிமுழுதுங்
தங்கத் திருவுலாச் சாற்றினான்—சங்கத்துப்
போற்றுந் தமிழ்நூல் பொதுக்கடிந்தா னென்றுலகஞ்
சாற்றுஞ் சிவப்பிரகா சன்

திருவெங்கையுலா முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

---

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

---

# பிழையுந் திருத்தமும்.

பிழைகளைத்திருத்திக்கொண்டேபடித்தல் நலம்.

| பக்கம். | டூ. | எண். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧0 | குறிப்பு | ௪ | முறண் | முரண் |
| ௫0 | ௮௭ | ,, | ,, | பாண் |
| ௫௫ | ௯௭ | ௨ | கையிலை | கயிலை |
| ௫௪ | தனி | ௫ | ருட்டா | ருட்டடா |
| ௫௮ | ௫௭ | ௧ | ளன்றிக் | ளன்றித் |
| ௫௯ | ௪௯ | ௨ | முடிதாங்கு | முடிதாங்கு |
| ௬0 | ௫௫௮ | ௨ | மணித் | மணிக் |